Suratin Coffee House

Written by:

Leo Tolstoy

English Translation by: Aylmer and Louise Maude

Translated In Tamil by: Revathi Kesavamani

Published by

A L I E N B O O K S



First Edition: June 2019

# முன்னுரை

மதம், மொழி, நாடு, இனம் இவை அனைத்தையும் தாண்டி கடவுள் என்பவர் ஒருவரே என்பதை டால்ஸ்டாயின் இந்தக் கதை சொல்கிறது. இந்தியாவின் சூரத்தில் உள்ள காபி ஹவுஸில் தொடங்கும் இந்தக் கதை அங்கு கூடும் பல நாட்டவர்களுக்கிடையே எழும் விவாதத்தை அடித்தளமாகக் கொண்டு பின்னப்பட்டுள்ளது.

இந்தக் கதையை வாசிக்கத் தொடங்கி அதன் போக்கை அறியாது தடுமாறும் நம்முடைய மனம், சற்று தூரம் சென்றதும் அதைப் பற்றுவதோடு, முடிவு என்னவாக இருக்கும் என்பதைக் குறித்துச் சிந்திக்கத் தொடங்கிவிடுகிறது.

அந்தச் சிந்தனை, டால்ஸ்டாய் நமது நம்பிக்கைகளை உயர்வாகக் காட்டி நம்மை பெருமையடையச் செய்வாரா என்ற கேள்வியினால் விளைவது. ஆனால் டால்ஸ்டாயின் இந்தக் கதை நம் அனைவரின் தற்பெருமையை உடைக்கிறது என்பதைப் புரிந்து கொண்டாலே இந்தக் கதையின் வீச்சு புலப்படும்.

அன்புடன்,

ரேவதி கேசவமணி

# சூரத்தின் காபி ஹவுஸ்

இந்தியாவிலுள்ள சூரத் நகரத்தில் காபி ஹவுஸ் ஒன்றிருந்தது. உலகத்தின் பல்வேறு பகுதிகளிலிருந்து வரும் பயணிகளும், வெளிநாட்டவர்களும் அங்கு சந்தித்து உரையாடுவார்கள்.

ஒரு நாள் பெர்சியன் நாட்டைச் சார்ந்த ஒரு தத்துவ அறிஞர் ஒருவர் அந்த காபி ஹவுஸிக்கு வந்தார். அவர் தனது வாழ்நாள் முழுவதையும் இறையியல் சம்பந்தமான ஆராய்ச்சியில் கழித்து வந்தார். அவர் அது சம்பந்தமாக நிறைய புத்தகங்களைப் படித்தும், எழுதியும் வந்தார். அவர் அளவுக்கதிகமாக கடவுள் சம்பந்தமானவற்றைப் படித்தும் எழுதியும் வந்ததால் அவர் இறுதியில் குழப்பத்திற்கு ஆளாகி சிந்திக்கும் திறனை இழந்து, கடவுள் மீதான தனது நம்பிக்கையையும் கைவிட்டார். இதைக் கேள்விப்பட்ட அரசர் அவரை பெர்சியாவிலிருந்து நாடு கடத்தினார்.

தனது வாழ் முழுவதும் கடவுளைப் பற்றி விவாதித்து வந்த அந்த துரதிருஷ்டமான தத்துவ அறிஞர் இறுதியில் குழம்பிப்போய், அவர் தான் தனது சுயமான சிந்தனையை இழந்துவிட்டதை அறியாமல், இந்த உலகத்தை மேலான எந்த ஒரு சக்தியும் வழிநடத்தவில்லை என்ற முடிவுக்கு வந்தார்.

ஆப்பிரிக்க நாட்டைச் சார்ந்த அடிமை ஒருவன் அவர் எங்கு சென்றாலும் அவரைப் பின்தொடர்ந்து சென்று கொண்டிருந்தான். தத்துவ அறிஞர் காபி ஹவுஸில் நுழைந்ததும், அந்த அடிமை வெளியில் கதவருகே இருந்த, சூரிய ஒளி பிரதிபலித்த கல் ஒன்றின் மீது அமர்ந்து, தன்னைச் சுற்றி வந்த ஈக்களை விரட்டிக் கொண்டிருந்தான். அந்த பெர்சியன் காபி ஹவுஸின் உள்ளே சோபாவில் அமர்ந்து, ஒரு குவளை அபினிக்கு உத்தரவிட்டார். அவர் அதை அருந்தியதும், அபினி அவரது மூளையை வேகமாகச் செயல்படத் தூண்ட, திறந்திருந்த கதவின் வழியாக தனது அடிமையை அழைத்தார்.

“சபிக்கப்பட்ட அடிமையே நீ சொல்” என்ற அவர், “கடவுள் இருக்கிறாரா அல்லது இல்லையா என்பதைப் பற்றி நீ என்ன நினைக்கிறாய்?” என்று கேட்டார்.

“நிச்சயமாக கடவுள் இருக்கிறார்” என்ற அடிமை உடனடியாக தனது கச்சையிலிருந்து ஒரு சிறிய மரத்தாலான சிலை ஒன்றை எடுத்தான்.

“இங்கே” என்ற அவன், “இந்தக் கடவுள் நான் பிறந்ததிலிருந்து என்னை வழிநடத்தி வருகிறார். எங்கள் நாட்டிலுள்ள ஒவ்வொருவரும் மரத்தை வழிபடுவார்கள். அந்த மரத்திலிருந்து இந்தக் கடவுள் செய்யப்பட்டிருக்கிறார்” என்றான்.

தத்துவ அறிஞருக்கும் அடிமைக்கும் நடந்த உரையாடை அந்த காபி ஹவுஸில் இருந்த விருந்தாளிகள் அனைவரும் வியப்போடு கவனித்தார்கள். எஜமானின் கேள்வியைக் கேட்டு வியப்புற்ற அவர்கள் அடிமையின் பதிலைக் கேட்டு மேலும் வியப்பெய்தினார்கள்.

அங்கிருந்து அந்தணர் ஒருவன் அடிமை சொன்னதைக் கேட்டு அவனை நோக்கி சொன்னார்:

“பரிதாபத்துக்குரிய முட்டாளே! கடவுளை ஒரு மனிதன் தனது கச்சையில் எடுத்துக்கொண்டு செல்ல முடியும் என நீ நம்புகிறாயா? கடவுள் ஒருவரே – பிரம்மா, இந்த உலகத்தைப் படைந்த அவர் இந்த உலகத்தை விட உயர்ந்தவர். பிரம்மம் ஒன்றே, அதுவே வல்லமைமிக்க கடவுள். அவருக்கு மரியாதை செய்யும் பொருட்டே கங்கைக் கரையில் கோயில் எழுப்பப்பட்டுள்ளது. அங்கே அவரது உண்மையான குருக்களும், அந்தணர்களும் அவரை வணங்குகிறார்கள். அவர்கள் உண்மையான கடவுளை அறிவார்கள், ஆனால் மற்றவர்களால் அது முடியாது. ஆயிரம் வருடங்கள் கடந்தபோதும், யுகம் யுகமாக இந்த குருக்கள் தங்கள் அதிகாரத்தைத் தக்கவைத்துள்ளார்கள் ஏனெனில் பிரம்மன், உண்மையான கடவுள் அவர்களைப் பாதுகாத்து வருகிறார்” என்றார்.

இவ்வாறு பேசிய அந்தணர் தான் அனைவரையும் நம்பவைத்து விட்டோம் என நினைத்தார். ஆனால் அங்கிருந்த ஒரு யூத தரகர்

அவருக்கு பதில் சொல்லும்விதமாகச் சொன்னார்:

“இல்லை! உண்மையான கடவுளின் கோயில் இந்தியாவில் இல்லை. மேலும் அவர் அந்தணர்களைப் பாதுகாக்கவும் இல்லை. உண்மையான கடவுள் அந்தணர்களின் கடவுள் இல்லை ஆனால் அபிரகாம், ஐசக், ஜேக்கப் இவர்களே. அவர் யாரையும் பாதுகாக்கவில்லை ஆனால் அவராகத் தேர்ந்த இஸ்ரேலியர்களையே அவர் பாதுகாக்கிறார். உலகத்தின் ஆரம்பத்தில் எங்கள் தேசம் மட்டுமே அவருக்குப் பிரியமானதாக இருந்தது. இப்போது நாங்கள் உலகம் முழுவதும் சிதறியிருந்தாலும், கடவுள் ஒரு நாள் எங்கள் அனைவரையும் ஜெருசேலத்தில் ஒன்று சேர்ப்பதாக வாக்களித்திருக்கிறார். அப்போது ஜெருசேலத்தில் உள்ள பண்டைய உலகின் அதிசயமான கோயில், மீண்டும் தனது புகழைத் திரும்ப அடையும். இஸ்ரேல் தனது ஆதிக்கத்தை உலகெங்கும் நிலைநாட்டும்.”

இவ்வாறு சொன்ன யூதர் பீறிட்டு அழுதார். அவர் மீண்டும் ஏதோ சொல்ல விரும்பியபோது, அங்கிருந்து இத்தாலிய மதபோதகர் குறுக்கிட்டார்.

“நீங்கள் சொல்வது உண்மையல்ல” என்று யூதரிடம் சொன்ன அவர், “உங்களது கருத்து கடவுளுக்கு நியாயம் செய்யவில்லை. அனைத்து நாடுகளைவிடவும் அவர் உங்கள் தேசத்தை விரும்பவில்லை. ஒருவேளை அவர் இஸ்ரேலியர்களுக்குச் சாதகமாக இருந்தார் என்றாலும், இப்போது இந்த ஆயிரத்து தொளாயிரத்தில் அவரைக் கோபமடையச் செய்துவிட்டார்கள். அதன் விளைவாக அவர் அவர்களது தேசத்தை அழித்து, அவர்களை நாடெங்கும் சிதறச் செய்துவிட்டதால் அவர்களின் நம்பிக்கை அவர்களிடம் எந்த மாற்றத்தையும் ஏற்படுத்தாது. எனவே அவர்கள் இங்கும் அங்குமாகச் சாவதைத் தவிர வேறு வழியில்லை. கடவுள் எந்த தேசத்திற்கும் முன்னுரிமை கொடுப்பதில்லை, ஆனால் தங்களைக் காப்பாற்றிக்கொள்ள விரும்புகிறவர்களுக்கு ரோமின் கத்தோலிக்க திருச்சபை அழைப்பு விடுத்துள்ளது, அந்த எல்லையைத் தாண்டி இருக்கும் யாரும் இரட்சிக்கப்பட மாட்டார்கள்.”

இவ்வாறு இத்தாலியர் பேசியதும் அங்கிருந்த புரஸ்டெஸ்டெண்ட அமைச்சர், முகம் வெளிறியவாறாக, அவரைப் பார்த்து வியப்புடன், “உங்களுடைய மதத்தில்தான் விடுதலைக்கான மார்க்கம் இருக்கிறது என்று நீங்கள் எப்படிச் சொல்லலாம்? கிறுஸ்துவத்தின்படி யார் கடவுளுக்குச் சேவை செய்கிறார்களோ அவர்களே காப்பாற்றப் படுவார்கள் என்று ஏசுகிருஸ்து சொல்லியுள்ளார்” என்றார்.

காபி ஹவுஸில் அமர்ந்து புகைபோக்கியில் புகைபிடித்தபடியிருந்த சூரத்தின் சுங்க அலுவலத்தில் பணியாற்றும் அதிகாரியான துருக்கியர் கிருஸ்துவர்களை நோக்கித் திரும்பினார்.

“ரோமானிய மதத்தின் மீது நீங்கள் கொண்டிருக்கும் நம்பிக்கை வீணானது” என்றார் அவர். “ஆயிரத்து இருநூறு ஆண்டுகளுக்கு முன் தோன்றிய உண்மையான நம்பிக்கை முகம்மது! நீங்கள் ஒப்புக்கொள்ளாவிடினும், முகம்மது மீதான நம்பிக்கை எப்படித் தொடர்ந்து ஐரோப்பாவிலும் ஆசியாவிலும், ஞானமிக்க சைனாவிலும் பரவிவருகிறது என்பதைக் கவனியுங்கள். நீங்கள் சொல்கிறீர்கள் கடவுள் யூதர்களைக் கைவிட்டு விட்டார் என்று. யூதர்கள் அவமானப்படுத்தப் பட்டதையும், அவர்களின் நம்பிக்கை பரவவில்லை என்பதையும் நீங்கள் அதற்கான ஆதாரமாகச் சொல்கிறீர்கள். முஹம்மதியம் அதனுடைய வெற்றியினால் எங்கும் பரவி வருகிறது என்பதை ஒப்புக்கொள்ளுங்கள். முஹம்மதுவைப் பின்பற்றுபவர்களைத் தவிர வேறு எவரும் காப்பாற்றப்பட மாட்டார்கள். கடவுளின் சமிபத்திய தீர்க்கதரிசியான உமரைப் பின்பற்றுபவர்களே விசுவாசிகள், மாறாக அலியைப் பின்பற்றுபவர்கள் விசுவாசத்திற்குப் பொய்யானவர்கள்.”

பெர்சியன் தத்துவ அறிஞர் அலியின் குழுவரைச் சார்ந்தவர் என்பதால் அவர் பதில் சொல்ல முயன்றார். ஆனால் இப்போது அங்கிருந்த வெவ்வேறு மதத்தைச் சார்ந்தவர்களுக்கும், நம்பிக்கை கொண்டவர்களுக்குமிடையே பெரும் வாக்குவாதம் தொடங்கியது. அங்கே அபிசீனிய கிருத்துவர்கள், திபத்திய லாமாக்கள், இஸ்லாமியர்கள், மற்றும் நெருப்பை வழிபடுபவர்கள் எனப் பலர்

இருந்தனர். அவர்கள் அனைவரும் கடவுளின் இயல்பையும், அவரை எப்படி வழிபடுவது என்பதையும் குறித்து விவாதத்தில் ஈடுபட்டனர். ஒவ்வொருவரும் தங்களுடைய நாட்டில்தான் உண்மையான கடவுள் இருக்கிறார் என்றும் அவரையே வழிபடுவதே சரியானது என்றும் உறுதியாகச் சொன்னார்கள்.

ஒவ்வொருவரும் விவாதித்து சப்தமிட்டபோது, சீனாவைச் சேர்ந்த கன்பியூசியஸின் சீடரான ஒருவர் காபி ஹவுஸின் ஓரத்தில் அமைதியாக அமர்ந்து, விவாதத்தில் பங்கெடுக்காமல் இருந்தார். அவர் டீ அருந்தியவாறு அங்கிருந்த அனைவரும் என்ன சொல்கிறார்கள் என்பதைக் கவனித்தபடி ஒன்றும் பேசாதிருந்தார்.

அவரைப் பார்த்த துருக்கியர் அவரிடம் முறையிட்டுச் சொன்னார்:

“நீங்கள் நான் சொல்வதை உறுதி செய்யுங்கள் என்னுடைய சீன நண்பரே. நீங்கள் மௌனத்தைக் கடைபிடித்தாலும், பேசத் தொடங்கினால் என்னுடைய கருத்தை நீங்கள் ஆதரிப்பீர்கள் என்று எனக்குத் தேரியும். உங்களுடைய நாட்டைச் சார்ந்த வியபாரிகள், என்னை உதவிகேட்டு வருகையில், சீனாவில் பல்வேறு மதங்கள் உருவாகியிருப்பினும், சீனராகிய நீங்கள் முஹம்மதிய மதத்தைச் சிறந்ததாகக் கருதுகிறீர்கள், அதை விருப்பத்துடன் ஏற்றுக்கொள்கிறீர்கள் என்று சொல்லுங்கள். ஆகவே, என் வார்த்தைகளை உறுதிசெய்து, உண்மையான கடவுள் மற்றும் அவருடைய தீர்க்கதரிசி பற்றிய உங்கள் கருத்தை எங்களிடம் கூறுங்கள்.”

“ஆமாம், ஆம்” என்று சொன்ன மற்றவர்கள் சைனாக்காரரைப் பார்த்து, “இந்த விசயத்தில் தாங்கள் என்ன நினைக்கிறீர்கள் என்பதைக் கேட்க விரும்புகிறோம்” என்றனர்.

கன்பியூசியஸின் சீடரான அந்த சீன மனிதர், தனது கண்களை மூடி சற்றே யோசித்தார். பிறகு கண்களைத் திறந்த அவர் தனது கைகளை தனது ஆடையின் பையிலிருந்து எடுத்து, தனது இதயத்தின் மீது வைத்து மடித்தவாறு, அவர்களிடம் சாந்தமாக அமைதியாகப் பேசினார்.

“கனவான்களே, நம்பிக்கை விசயத்தில் ஒருவர் சொல்வதை மற்றவர் ஏற்றுக்கொள்வதற்குத் தற்பெருமை பெரும் தடையாக இருக்கிறது என்று எனக்குத் தோன்றுகிறது. நீங்கள் நான் சொல்வதைக் கேட்க விரும்பினால், நான் உங்களுக்கு ஒரு கதை மூலம் அதை விளக்குகிறேன்.

நான் சீனாவிலிருந்து உலகம் முழுதும் சுற்றும் ஆங்கிலேயரின் கப்பலில் இங்கே வந்தேன். நாங்கள் குடிதண்ணீருக்காக, சுமத்ரா தீவின் கிழக்குக் கடற்கரையில் இறங்கினோம். அது மதிய நேரம் என்பதால் எங்களில் சிலர் கடற்கரையில் தென்னை மரத்தின் நிழலில் அமர்ந்தனர். அந்த இடம் கிராமத்திற்கு வெகுதொலைவில் இல்லை. எங்களிடையே பல்வேறு நாட்டைச் சார்ந்தவர்கள் இருந்தனர்.

நாங்கள் அங்கே அமர்ந்திருந்தபோது ஒரு குருட்டு மனிதன் எங்களை நோக்கி வந்தான். சூரிய வெளிச்சத்தை என்னவென்று அறிவதற்காக அதை உற்றுப் பார்த்தவாறு, அதன் ஒளியைக் கைப்பற்ற அவர் முயற்சித்தார் என்பதை நாங்கள் பின்னர் அறிந்தோம்.

அதை நிறைவேற்ற நீண்ட நேரம் முயற்சித்த அவர், தொடர்ந்து விடாமல் சூரியனைப் பார்த்தபடி இருந்து அதன் விளைவாக ஒளியின் பிரகாசத்தால் பாதிக்கப்பட்டு குருடானார்.

பிறகு அவர் தனக்குள் சொல்லிக்கொண்டார்:

“சூரியனின் வெளிச்சம் ஒரு திரவமல்ல. அப்படி அது திரவமாக இருந்தால், அதை ஒரு பாத்திரத்திலிருந்து மற்றொரு பாத்திரத்தில் ஊற்ற முடியும். தண்ணீரைப் போல அதைக் காற்றினால் நகர்த்த முடியும். அது நெருப்பும் அல்ல. அப்படி அது நெருப்பாக இருந்தால் தண்ணீர் அதை அணைத்துவிடும். அது ஆவியுமல்ல ஏனெனில் அதைக் கண்களால் காண முடிகிறது. அது பொருளுமல்ல ஏனெனில் அதை நகர்த்த முடியாது. எனவே சூரிய வெளிச்சம் ஒரு திரவமோ, ஆவியோ அல்லது பொருளோ இல்லை, அது ஒன்றுமில்லை!”

இவ்வாறு விவாதித்த அவர், தொடர்ந்து சூரியனைப் பார்த்து வந்ததாலும், அதைப் பற்றியே சிந்தித்து வந்ததாலும், தனது இரண்டு கண்களையும் இழந்ததோடு பகுத்தறிவையும் இழந்தார். அவர் குருடான பின்னர், சூரியன் உண்மையில் இருக்கவே இல்லை என்ற முடிவுக்கு வந்தார்.

அந்தக் குருட்டு மனிதனோடு கூட வந்த ஒரு அடிமை அந்த மனிதனை தென்னை மரத்தின் நிழலில் அமரவைத்தான். பிறகு அவன் தரையிலிருந்து ஒரு தேங்காயை எடுத்து அதைக்கொண்டு இரவு விளக்கைச் செய்தான். தேங்காயின் நாரிலிருந்து திரியைச் செய்த அவன், தேங்காயின் பருப்பிலிருந்து எண்ணையைப் பிழிந்து எடுத்து, அதை தேங்காய் மூடியில் ஊற்றி திரியை ஊற வைத்தான்.

அடிமை அதைச் செய்துகொண்டிருக்கையில் அந்தக் குருட்டு மனிதன் பெருமூச்சுடன் அவனிடம் சொன்னான்:

“நல்லது, அடிமையே. சூரியன் இல்லை என்று நான் சரியாகத்தானே சொன்னேன்? எப்படி இருட்டாயிருக்கிறது என்பதை நீ பார்க்கவில்லையா என்ன? இருந்தும் மனிதர்கள் சூரியன் இருக்கிறது என்கிறார்கள்... ஆனால் அப்படியிருப்பின் அது என்ன?”

“எனக்குச் சூரியன் என்ன என்பது தெரியாது” என்று சொன்ன அடிமை, “அது என்னுடைய வேலையுமல்ல. ஆனால் வெளிச்சம் என்ன என்பது எனக்குத் தெரியும். இங்கே நான் ஒரு இரவு விளக்கைச் செய்திருக்கிறேன். அதன் உதவியால் நான் உங்களுக்குப் பணிவிடை செய்யவும், குடிசையில் இருக்கும் எதையும் நான் கண்டுபிடிக்க முடியும்” என்றான்.

தேங்காய் மூடியைக் கையிலெடுத்த குருட்டு மனிதன் சொன்னான்:

“இதுவே என்னுடைய சூரியன்.”

ஊன்றுகோலுடன் அருகில் அமர்ந்திருந்த ஒரு நொண்டி, இந்த வார்த்தைகளைக் கேட்டுச் சிரித்தார்.

“வாழ்நாள் முழுவதும் நீங்கள் குருடனாக இருந்திருக்கிறீர்கள் என்பது அப்பட்டமாகத் தெரிகிறது” என்று குருட்டு மனிதனிடம் சொன்ன அவன்,

“சூரியன் என்ன என்பது கூடத் தெரியவில்லை. அது என்ன என்பதை நான் உங்களுக்குச் சொல்கிறேன். சூரியன் ஒரு வெப்பப் பந்து. அது ஒவ்வொரு நாள் காலையிலும் கடலிலிருந்து உதித்து மேலெழுந்து பிறகு மீண்டும் மாலையில் நமது தீவின் மலைகளுக்கிடையே மறைகிறது. நாங்கள் அனைவரும் அதைப் பார்க்கும்போது, உங்களுக்குப் பார்வையிருந்தால் நீங்களும் அதைப் பார்க்க முடியும்” என்றார்.

அந்த உரையாடைக் கேட்டுக்கொண்டிருந்த மீனவர் சொன்னார்:

“நீங்கள் உங்கள் சொந்தத் தீவை விட்டு வேறெங்கும் சென்றதில்லை என்பது தெளிவாகத் தெரிகிறது. நீங்கள் நொண்டியாக இல்லாவிட்டால், என்னோடு மீன்பிடிக்கும் படகில் வந்து பார்த்தால் உங்களுக்குத் தெரியும் சூரியன் உங்களது தீவின் மலைகளுக்கிடையே சென்ற மறையவில்லை என்பது. ஆனால் அது ஒவ்வொரு நாள் காலையும் கடலிலிருந்து எழுகிறது எனவே அது மீண்டும் ஒவ்வொரு இரவும் கடலில் சென்று மறைகிறது. நான் சொல்வது உண்மையானது, நான் ஒவ்வொரு நாளும் அதை என்னுடைய சொந்தக் கண்களால் பார்க்கிறேன்.”

அப்போது எங்களுடன் இருந்த இந்தியர் ஒருவர் குறுக்கிட்டுச் சொன்னார்:

“ஒரு புத்தியுள்ள மனிதன் இப்படி முட்டாள்தனமாகப் பேசுவதைக் கண்டு நான் வியப்படைகிறேன். ஒரு வெப்பப் பந்து தண்ணீரில் சென்று மறைந்தால் எப்படி அணையாமல் இருக்க முடியும்? சூரியன் ஒரு வெப்பப் பந்து அல்ல, அது தேவா என்ற பெயருடைய ஒரு தெய்வம். அவர் எப்போதும் தனது ரதத்தில் தங்க மலையான மேருவைச் சுற்றி வருகிறார். சில நேரங்களில் தீய பாம்புகளான ராகுவும் கேதுவும் தேவாவைத் தாக்கி அவரை விழுங்குகையில் இந்த பூமி இருளாகிறது. ஆனால் எங்களது குருமார்கள் தேவா வெளியே வருவதற்காகப் பிரார்த்தனை செய்ய அவர் வெளியே வருகிறார். உங்களைப் போன்ற அறிவிலிகள், உங்களின் சொந்தத் தீவை விட்டு வெளியே வந்ததில்லை

என்பதால் உங்களது நாட்டில் மட்டுமே சூரியன் உதிக்கிறான் என்று கற்பனை செய்துகொள்கிறீர்கள்."

அப்போது அங்கிருந்த எகிப்திய கப்பலின் எஜமானர் ஒருவர் பேசினார்.

"இல்லை" என்ற அவர், "நீங்களும் தவறாகச் சொல்கிறீர்கள். சூரியன் தெய்வம் அல்ல, அது இந்தியாவின் மேரு மலையை மட்டும் சுற்றி வரவில்லை. நான் கருங்கடலில் வெகுதூரம் பிரயாணம் செய்திருக்கிறேன். மேலும் அரேபியா, மடகாஸ்கர், பிலப்பைன்ஸ் முதலிய நாடுகளின் கரையோரங்களில் பயணம் செய்திருக்கிறேன். சூரியன் இந்த பூமி முழுவதற்கும வெளிச்சம் தருகிறது இந்தியாவிற்கு மட்டுமல்ல. அது ஒரே ஒரு மலையை மட்டும் சுற்றி வரவில்லை, அது கிழக்கில் உதித்து, ஜப்பான் தீவுக்கு அப்பால் சென்று, மேற்கில் இங்கிலாந்து தீவுக்கும் அப்பால் மறைகிறது. அதனால்தான் ஜப்பானியர்கள் தங்கள் தீவை 'நிப்பான்', அதாவது 'சூரியனின் பிறப்பிடம்' என்கிறார்கள். நான் அதிகமாகப் பார்த்தவன் என்பதால் இதை நான் நன்கறிவேன். மேலும் பலவற்றை நான் எனது தாத்தாவிடமிருந்து கேட்டிருக்கிறேன். அவர் கடலின் ஒவ்வொரு மூலை முடுக்கும் சென்றிருக்கிறார்."

அவர் மேற்கொண்டு சொல்ல முற்பட்டார் என்றாலும் எங்கள் கப்பலிலிருந்த ஆங்கில மாலுமி ஒருவர் அவரைக் குறுக்கிட்டார்.

"சூரியனின் அசைவுகளைப் பற்றி இங்கிலாந்து நாட்டு மக்களைப் போல அதிகமாக அறிந்தவர்கள் வேறேந்த நாட்டிலும் இல்லை. இங்கிலாந்தில் உள்ள ஒவ்வொருவரும் சூரியன் எங்கேயும் உதிக்கவில்லை எங்கேயும் மறையவில்லை என்பதை அறிவார்கள். அது எப்போதும் இந்த பூமியைச் சுற்றி வருகிறது. நாம் இந்த பூமியைச் சுற்றி வருகையில், நாம் எங்கேயும் சூரியன் மீது மோதிக்கொள்வதில்லை என்பதிலிருந்து இதை நாங்கள் உறுதியாகச் சொல்கிறோம். நாம் எங்கே சென்றாலும் சூரியன் காலையில் உதிக்கிறது இரவில் மறைகிறது, இங்கே செய்வதைப் போல."

அந்த ஆங்கிலேயர் ஒரு குச்சியை எடுத்து, மணலில் ஒரு வட்டம் வரைந்து, சூரியன் எவ்வாறு உலகத்தைச் சுற்றி வருகிறது என்பதை விளக்கத் தொடங்கினார். ஆனால் அவரால் தெளிவாக அதை விளக்க முடியவில்லை என்பதால் அவர் கப்பலின் தலைவரைச் சுட்டிக்காட்டி சொன்னார்:

“இந்த மனிதர் என்னைவிட அதிகமாக அறிவார். அவர் தெளிவாக உங்களுக்கு விளக்குவார்.”

புத்திசாலி மனிதரான அவர், தன்னைப் பேசும்படி கேட்டுக்கொள்ளும் வரை அனைத்தையும் மௌனமாகக் கேட்டுக்கொண்டிருந்தார். இப்போது அனைவரும் அவரை நோக்கித் திரும்ப அவர் சொன்னார்:

“நீங்கள் அனைவரும் ஒருவரையொருவர் தவறாக வழிநடத்துகிறீர்கள் என்பதோடு உங்களை நீங்களே ஏமாற்றிக் கொள்கிறீர்கள். சூரியன் பூமியைச் சுற்றிச் செல்லவில்லை, ஆனால் இந்த பூமி சூரியனைச் சுற்றிச் செல்கிறது. ஒவ்வொரு இருபத்து நான்கு மணி நேரமும் அது தன்னைத்தானே சுற்றிச் செல்கையில் சூரியனை நோக்கித் திரும்புகிறது. ஜப்பான் என்றில்லை, பிலிப்பைன்ஸ், இப்போது நாமிருக்கும் சுமத்ரா, ஆப்பிரிக்கா, ஐரோப்பா, அமெரிக்கா இப்படி பல நாடுகளுக்கும் தெரிகிறது. சூரியன் ஏதோ ஒரு மலைக்கும் அல்லது ஏதோ சில தீவுக்கும் அல்லது ஏதோ சில கடல்களுக்கும், மேலும் அது ஒரே ஒரு பூமிக்கும் மட்டும் வெளிச்சம் தராமல் நம்முடைய பூமியைப் போன்ற பல கிரகங்களுக்கும் வெளிச்சம் தருகிறது. நீங்கள் மேல உள்ள வானத்தை மட்டும் பார்க்காமல் உங்களுடைய பாதத்திற்குக் கீழே உள்ள பூமியைப் பார்த்தால் நீங்கள் அனைவரும் சூரியன் உங்களுக்காக மட்டுமில்லாமல் உங்களுடைய நாட்டிற்காக மட்டுமில்லாமல் உலகம் முழுவதற்கும் ஒளி வீசுகிறது என்பதைப் புரிந்துகொள்வீர்கள்.

உலகம் முழுவதும் பயணம் செய்த அந்த புத்திசாலி தலைவர் இவ்வாறு பேசி முடித்து மேலே உள்ள வானத்தைப் பார்த்தார்.

“எனவே நம்பிக்கையின் படி” என்று தொடர்ந்த கன்பூசியஸின் சிடரான சைனாக்காரர், “தற்பெருமை தவறையும் வேற்றுமையையும்

மனிதர்களிடையே ஏற்படுத்துகிறது. சூரியனைப் போலவே அது கடவுளுக்கும் பொருந்தும். ஒவ்வொரு மனிதனும் தனக்கென பிரத்யேகமான ஒரு கடவுளை, அல்லது குறைந்தபட்சம் தனது சொந்த பூமிக்கென்று தனியாக ஒரு கடவுளை வைத்துக்கொள்ள விரும்புகிறான். அவரை இந்த உலகில் வைத்திருக்க முடியாமல் ஒவ்வொரு தேசமும் தனது சொந்தக் கோவில்களில் அடைத்து வைக்க விரும்புகிறது. எல்லா மனிதர்களையும் ஒரே நம்பிக்கையிலும் ஒரே மதத்திலும் ஒன்றிணைக்க கடவுள் தானே கட்டியெழுப்பியதை எந்த ஆலயத்தோடும் ஒப்பிட முடியுமா?”

“மனிதர்கள் கட்டிய அனைத்துக் கோயில்களும் கடவுளின் சொந்த உலகமான கோவிலையே மாதிரியாகக் கொண்டுள்ளது. ஒவ்வொரு கோவிலும் அதற்கென அதன் எழுத்துருக்கள், அதன் கூரை, விளக்குகள், படங்கள் அல்லது சிற்பங்கள், கல்வெட்டுகள், சட்ட புத்தகங்கள், பிரசாதம், பலிபீடங்கள் மற்றும் குருமார்களைக் கொண்டுள்ளது. ஆனால் எந்தக் கோவிலும் கடல் போன்ற எழுத்துருவும்; வானம் போன்ற கோபுரமும்; சூரியன், சந்திரன் மற்றும் நட்சத்திரங்கள் போன்ற விளக்குகளும்; அல்லது அன்பாக, பரஸ்பர உதவிகரமாக மனிதர்கள் வாழும் உலகத்தோடு ஒப்பிடும்படி உள்ளதா? மனிதனின் மகிழ்ச்சிக்காக எந்த ஒரு கடவுள் உலகெங்கும் பரவியிருக்கிறார் என்பதை எளிதாகப் புரிந்துகொள்ள, கடவுளின் நல்லியல்பைக் குறித்த ஏதேனும் பதிவுகள் எங்கேயும் இருக்கிறதா? ஒவ்வொரு மனித இதயத்திலும் எழுதப்பட்டதைப் போன்றத் தெளிவான சட்டப் புத்தகம் எதேனும் எங்கேயாவது இருக்கிறதா? ஒருவரை ஒருவர் விரும்பும் ஆண்களும் பெண்களும் தங்களுக்குள் செய்து கொள்ளும் தியாகத்திற்கு நிகராக எந்தத் தியாகமாவது இருக்கிறதா? கடவுள் தானே ஏற்றுக்கொள்ளும் நல்ல மனிதனின் இதயத்திற்கு நிகராக ஒப்பிடக்கூடிய வணங்கத்தக்க இடம் ஏதேனும் இருக்கிறதா?”

“கடவுளைப் பற்றிய மனிதனின் புரிதல் உயர்வாக இருக்கும் அளவிற்கு அவன் கடவுளை நன்றாகப் புரிந்துகொள்ள முடியும். அப்படி அவன் நன்றாகக் கடவுளை அறிந்தால், அவனுடைய நல்லியல்பு, அவனுடைய

கருணை, பிற மனிதர்கள் மீதான அவனது அன்பு இவற்றைப் பின்பற்றி அவர் அவனை நெருங்கி வருகிறார்."

"ஆகையால், சூரியனின் முழு ஒளியும் உலகை நிரப்புவதைப் பார்க்கிறவன், மூடநம்பிக்கை கொண்ட மனிதனை பழிப்பதையோ அல்லது இகழ்வதையோ தவிர்த்துவிட்டு, தனது சொந்தக் கடவுளின் ஒரு கீற்றில் அந்த வெளிச்சத்தைப் பார்க்க முடியும். குருடனாயிருந்து சூரியனைக் காணமுடியாத நம்பிக்கை இல்லாதவனைக் கூட இகழக்கூடாது."

இவ்வாறு அந்த சீன மனிதன், கன்பூசியஸின் சீடர், பேசியதும் காபி ஹவுஸில் இருந்த அனைவரும் மௌனமாகி, யாருடைய நம்பிக்கை சிறந்தது என்பதை மேற்கொண்டு விவாதிக்காமல் விட்டனர்.